உ

# அறுபத்து மூவர் துதிப்பா

தணிகைமணி ராவ்பஹதூர்
வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். ஏ.
இயற்றியது



October 1950

விலை அணா எட்டு.

உ

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

---

1909-ஆம் ஆண்டில் சொக்கநாதரது அறுபத்து நான்கு திருவிளையாடல்களை அறுபத்து நான்கு வகையான விருத்தப்பாக்களிற் பாடி மகிழும் பேற்றினைப் பெற்ற எனக்கு அறுபத்து மூன்று நாயன்மார்களின் சரிதக் குறிப்பை அறுபத்து மூன்று வகையான பாக்களிற் பாடும் பேறு இப்போது தான், என் இளவலின் தூண்டுதலாற், கிடைத்தது. 1909-ஆம் ஆண்டில் ஆண்டவன் புகழை ஓதிய அடியேற்கு அடியவர் புகழை ஓத இடையில் 41-ஆண்டுகள் சென்றுவிட்டனவே என்னும் வருத்தம் ஒரு பாலும், இப்போதேனும் எனதன்பிற்குரியவர் மூலமாக, இவ்வாய்ப்பு கிடைத்ததே என்னும் மகிழ்ச்சி ஒரு பாலும் விளைகின்றன.

அடியார் பெருமையை—"விண்டொழிந்தன நம்முடை மேல்வினை.... தொண்டரோ டிருந்தமையாலே" எனச் சம்பந்தரும், "உய்யப் போக்கேனுக்கும் உண்டு கொலோ * * * ஆரூர்த் திருமூலட்டானனுக்குப் பொய்யிலா அடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என அப்பரும், "அடியார்க்கும் அடியேன்"— எனத் திருத்தொண்டத் தொகையிற் சுந்தரரும், "அப்பன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங்

கண்டாமே'—என மாணிக்கவாசகரும், "அன்பாற் செழு தலிலாத் தொண்டரிற் கூட்டியவா * * * வேலோன்"— என அருணகிரியாரும் மிக அருமையாக எடுத்துக் கூறியுள்ளார்கள். ஆதலால், அடியார் புகழைப் பாடும் பேறு எளிதிற் கிடைக்கக் கூடிய பேறு அல்ல என்பது தெளிவாக விளங்குகின்றது. அதுபற்றியே ஆண்டவன் புகழைப் பாடுவதற்கும் அடியார் புகழைப் பாடுவதற்கும் 41-ஆண்டு என்னும் நீண்ட இடைவெளி வேண்டியிருந்தது போலும்.

2. இன்ன நாயன்மார் இன்ன தொண்டு செய்தார் என்பது விரைவில் எளிதில் விளங்கவேண்டிப் பாடல்களின் சுருக்கமும் வசனமாக எழுதப்பட்டுள்ளது.

3. பண்ணுடன் பாடச் சில பாடல்கள் அமையும் என்பதைக் காட்ட இன்ன பாட்டு இன்ன தேவாரப் பண்ணில் அமையும் என்பதைக் காட்டும் அநுபந்தம் ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளது.

4. ஆசை காரணமாக யாக்கப்பட்ட இந்நூலின் உள்ள பிழைகளை ஆன்றோர் பொறுத்தருளுவாராக.

சென்னை
292. லிங்கிசெட்டித் தெரு } வ. சு. செங்கல்வராய பிள்ளை.
10-10-1950

# உள்ளுறை

எண் - பாட்டின் எண்

---

உ

## நூல் வரலாறு

என்னைப் பொருட்படுத்தி என் இளவல் ஆறுமுகன்
முன்னை அறுபத்து மூவர்புகழ் பாவகையிற்
சொன்னி யெனச்சொல்லச் சொன்னேன் சிவனருளால்
என்னே ! என் பாக்கியந்தான் இன்று.

திருச்சிற்றம்பலம்

# அறுபத்து மூவர் துதிப்பா

## காப்பு

திருவார் அறுபத்து மூவர் சிறப்பதைச் சிந்தை செய்தே
மருவார் மலரன்ன பாமாலை சாத்த வருந்துணை யாம்
ஒருவா ரணமுகத் தானை அமரில் உடன்றடர்த்த
பெருவா ரணமுகப் பாசாங் குசதரன் பேரருளே.

## நூல்

### 1. திருநீலகண்ட நாயனார்

ஒரு 'நீல கண்டம்' எனுமாணையி லுற்ற அன்பால்
மருநீல கண்ணி தனைநீத்து மறைத்த ஓட்டில்
வரு நீதி யாலே இளமைப்பரு வத்தை யுற்ற
திருநீலகண்டர் திருத்தாளினை சிந்தை செய்வாம்.

### 2. இயற்பகை நாயனார்

இல்லை யென்ற சொல் இல்லை யெனும்படி
*இல்லை ஈசியனும் எம்பெரு மானுக்கே
நல்ல தன்மனை யாளையே நல்கிய
**எல்லி யற்பகை ஏந்தலை ஏத்துவாம்.

---

* இல் — மனையாள். ** எல் — பெருமை.

### 3. இளையான்குடி மாற நாயனார்

மின்னுவரு மழையிற் செநெல் வேகங்கொடு வந்தே
தன்னுயக அடியாருண நாளுவிதங் கறிசெய்
என்னுமனை யாளுக்குரை இளையான்குடி மாறன்
பொன்னார்கழல் என்காவியில் போற்றிப்பணி வேனே.

### 4. மெய்ப்பொருள் நாயனார்

* பொய்வேடம் மெய்வேடம் போலவே பூண்டாலும்
உய்வேடம் கண்ட உணர்வுடையார்–மெய்வேண்டித்
"தத்தா நமர்" என்ற தத்துவத்தார் 'மெய்ப்பொருள்' சீர்
** நத்தா மகிழ்ந்திடுவேன் நான்.

### .5. விறன்மிண்ட நாயனார்

அடியாரை வணங்காத ஆரூரன் புறகே
அவன்நாடும் ஆரூரெம் பெருமானும் புறகே
படியார்கள் அறியின்கள் எனவன்மை பேசிப்
பண்பூட்டுஞ் சீராளன் பெரும்பத்தி யாளன்
செடியாய வல்வினைகள் தீர்க்கின்ற தெய்வத்
திருத்தொண்டத் தொகைபாட முன்வைத்தபெரு-
கடியாரும் பொழில் சூழும் செங்குன்றூர் வந்த [மான்
கண்ணாளன் விறன்மிண்டன் எந்நாளும் வாழ்க.

### 6. அமர்நீதி நாயனார்

நனைகோவ ணத்தோடும் உள்ளேன் முன்
நான்தந்த தாமந்த நலகோவணம்
தனைவேக மாக்கொண்டு வா என்ன
அதுகாண மாட்டாது தடுமாறிட

---

* திருமந்திரம் 1660. * நத்தா = நத்தி,

இனையாத வழிசொல்வன் இங்குள்ள
இக்கோவ ணம்நேரும் எடைதாவென
மனையோடு மகவோடு துலையேறி
நேர்செய்த அமர்நீதி மதியேத்துவாம்.

## 7. எறிபத்த நாயனார்

* வடவால னடிபேணு சிவகாமி ஆண்டார் மலர்க்கூடையை
அடலாகி நண்ணிப் பறித்தெங்கு மேசிந்தி அங்கேகு மவ்
** வடனாக மதையட்ட அதிவீரர் அடியார்கள் அவர் காவல் தங்
கடனாக விரதங்கொள் நெறிபேணும் எறிபத்தர் கழலேத்துவாம்.

## 8. ஏனாதிநாத நாயனார்

திருநீறிடாத அதிசூரன் திருநீறிட்டான் எனக்கண்டே
ஒருபோருடற்று துயிரிழந்த உண்மைப் பத்திச் சீராளர்
திருநீறேநற் சார்பாகுஞ் செல்வ மென்னச் சீராட்டும்
பெருசீர்க் குணத்தர் ஏனாதி நாதர் பெருமை பேசுவாம்.

## 9. கண்ணப்ப நாயனார்

நன்னன்பர் கண்ணிடத்தே சோரிவரக் காண்டலுமே தரியா தேங்கி
என்னன்பே! என்னுயிரே! என்னிருகண் மணியேயோ! என்றிரங்கித்

---

* வட ஆலன் = கல்லால மரத்தின் கீழான்.
** அடல் நாகம் = வலிய ஆனை.

தன்னமுமே தாழாது தன் கண்ணை இடந்தப்புந்
தகைமை வாய்ந்,
என்னப்பன் கண்ணப்பன் இருபாதம் மூப்போதும்
ஏத்தி வாழ்வாம்

## 10. குங்கிலியக் கலய நாயனார்

வறுமைப்பட வந்திடு வேளையிலே
மனையாள்தரு தாலியை மாற்றிவரு
நறுமென்புகை குங்கிலியம் நசைபால்
நாடிப்பெறு தொண்டுசெய் காலிலயல்
உறுதென் பனசைப் பெருமான் உருவம்
உயர்நேர்நிலை உற்றிடு மாறுசெய்தே
கறுமா களனைக் கருதுங் கடவூர்க்
கலயன் கழலே கருதிப் புகழ்வாம்.

## 11. மானக்கஞ்சாற நாயனார்

தேனக்க குழற்புதல்வி திருமணநாள் வருமுனிவர்
பானற்கண் இவள்கூந்தல் பஞ்சவடிக் காமென்ன
கூனற்கண் வாள்கொண்டு கூந்தலரிந் தேயுதவும்
மானக்கஞ் சாறர் புகழ் வாயார வாழ்த்துவனே.

## 12. அரிவாட்டாய நாயனார்

நிமலருக்குச் செங்கீரை நெல் மாவடு
நியமமாகநி வேதிக்கச் செல்லலும்
தமையுறாத்து பசியிற் றளளாடியே
தவறிவீழ அமுது நிரையிலே

கமரிடைச் சிந்தக் கண்டரி வாளிற் றங்
        கழுத்தரிய விடே லெனும் ஓசையால்
அழுது செய்வதைக் கண்ட அத் தாயனார்
        அவர் பதத்தைக் கருத்தி லிருத்துவாம்.

### 13. ஆனாய நாயனார்

திசையோர் மெச்சுந் தீங்குழலின்
இசையே அரனுக் கினிதூட்டும்
நசை யானாயர் நற்கழலின்
மிசையே வீழ்ந்து விரும்புவமே.

### 14. மூர்த்தி நாயனார்

எங்குமே சந்தனக் குறடி லாமையால்
தங்கையே கட்டையாச் சாரத் தேய்த்தவர்
அங்கணன் [1] அருளர சாட்சி செய்தவர்
எங் [2] கணார் மூர்த்தியை என்றும் ஏத்துவாம்.

### 15. முருக நாயனார்

மங்குல் தவழ்புக ஊரில் வர்த்த
        மானீச் சுரத்துறை வள்ளலார்க்குக்
கொங்கவிழ் மாலை பலவகைய
        குறிப்பறிந் தேபல கோலஞ் செய்தே
அங்கங் குளிர்ந்தவன், காழி வந்த
        அண்ணல் சம்பந்தருக் குற்ற நண்பன்
பொங்கு திருமணச் சோதி புக்க
        போதன் முருகனைப் போற்றுவமே.

---

1 அருள் = அருளிய (வினைத்தொகை)

2 கணார் = கண்ணார்.

## 16. உருத்திர பசுபதி நாயனார்

திருத்தனை நினைத்துளம் நீரில் நின்றே
அருத்தியொ டுருத்திரம் அது ஜெபஞ்செய்
உருத்திர பசுபதி ஒண் மலர்த்தாள்
கருத்தினி லிருத்தியே கை தொழுவாம்.

## 17. திருநாளைப் போவார் நாயனார்

கருநாசம் உறப்புன் கூர்ச் சிவற்கே தொண்டு
கருதிபல தொண்டியற்றித் தில்லை காணும்
ஒருநாளும் உண்டோ என் றுருகி நிற்க
உம்பர்பிரான் 'எரிமூழ்கி வா' என் றேதத்
திருநாடி அங்ஙனமே எரியில் மூழ்கிச்
சிவமுநியின் திருவேடம் பொலிய வந்த
திருநாளைப் போவார்நம் திறமே பேசித்
தீராத வல்வினை நோய் தீர்ப்பா மன்றே.

## 18. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

வந்த அடியார்தம் அழுக்கேறு கந்தையை
வாங்கித் துவைத்து நன்றாய்
மாலைக்குள் தருவன்நான் தப்பா தெனச்சொல்லி
வாரியிற் றப்பு மப்போ
தந்தகா ரம்போல மேகங்கள் கூடியே
அடர்மழை விடாது பெய்ய
ஐயகோ ஐயா உடை எங்ஙனம் உலர்த்துவேன்
அபசார மே அடைந்தேன்
இந்த உயிர் மாய்ப்பனென் றங்குள்ள பாறையில்
எற்றுமொரு தலை தன்னையே

எம்பிரான் அடியவர்கள் தம்பிரான் ஏகம்பன்
ஏந்துதன் மலர்க் கரத்தால்
சிந்திடா வண்ணமே பிடித்துத் தடுக்குமத்
திருவருட் பேறு பெற்ற
திருக்குறிப் புத்தொண்டர் அருட்குறிப் பைச் சிந்தை
சேர்த்துக் களித்து மகிழ்வாம்.

## 19. சண்டேசுர நாயனார்

புரிசிவ பூஜைக் குற்றபாற் குடத்தைப்
பொருக்கென வந்துதன் தாதை
தரிசினத் தோடும் இடறிடத் தாளை
யெறுதவன் தாளற வீசி
எரிசடை யிறைநிர் மாலியம் தொண்டர்க்
கிறை யெனும் இனியநற் பதவி
பரிசிலாப் பெற்ற குரிசில் சண்டேசர்
பதுமலர் நிதநினைந் துய்வாம்.

## 20. திருநாவுக்கரசு நாயனார்

அஞ்செழுத் தெனும்புணை கொண்டு நீர்க்கடல்
அதனுடன் பவக்கடல் கடந்து நின்றவர்
வஞ்சனை ஐம்புலன் விட்ட மாதவர்
வாசியி லாதபோர் காசு பெற்றவர்
செஞ்சைவ மறைக்கத வம்பி ரித்தவர்
தீவிடந் தீர்த்தவர் கயிலைக் காட்சியை
உஞ்ச ஐ யாற்றினிற் கண்ட உத்தமர்
ஒப்பிலா அப்பரை உன்னி உய்குவாம்.

## 21. குலச்சிறை நாயனார்

நங்கள் காழிமா ஞானனைக் கொண்டு
மங்கு தல்லிலா மாறன் நாட்டினில்
எங்குஞ் சைவமே இலகு மாறுசெய்
நங்கு லச்சிறை நாதற் போற்றுவாம்.

## 22. பெருமிழலைக் குறும்ப நாயனார்

* ஈடிலியெம் ஆரூரன் இணைகழலே
என்றும் அன்பாய்
நாடியவன் மாகயிலை நண்ணுமுனம்
கயிலை வெற்பைக்
கூடியவர், மாயோகி, பெருமிழலைக்
குறும்பர் மேலாம்
நீடியலை நிதந்துதித்து நித்தத்வம்
பெறுவோம் நாமே.

## 23. காரைக்கால் அம்மையார்

அம்ம! ஏதிந்தப் பெருஞ்சுவை மாம்பழம்!
தெய்வமே அவளென்று
மம்ம ரோடுநா யகனகன் றேசெல,
மண்ணுல கியல் விட்டே,
கம்மு லாம் * வட வனநடன் அடிநிழல்
களிக்குமெங் காரைக்கால்
அம்மையார் பதம் செம்மையாய் நித்தமும்
அன்புடன் அருச்சிப்பாம்.

---

* இச் செய்யுளில் ஒவ்வோரடியிலும் ஈற்றுச் சீரை விட்டாலும் பாடல் பொருள் தரும்.

* வடவனம் – ஆலங்காடு

24. அப்பூதி அடிகள்

பரசிவன் தாளிணை பற்றிய நாவுக்
கரசெனும் நாமத்தி லாழ்ந்ததோர் பத்தி
புரிசெய லான்திங்க ளூரனப் பூதி
இருசர ணேயெனக் கின்பம தாமே.

25. திருநீல நக்க நாயனார்

உற்றபே ரன்பாற் சிலந்தியை ஊதி
உண்மனை விலக்கிய ஓரிடம் அன்றி
மற்ற இடங்களிற் சிலம்பியின் கொப்புள்
வந்தது பாரென் றிறையவர் காட்டப்
பெற்ற திருவினர்; ஞானசம் பந்தர்
பேசும் புகழினர், அவர் திரு மணஞ்செய்
நற்றவர்; ஜோதி கலந்தவர்; நீல
நக்கரைப் போற்றிநந் துக்கங் களைவாம்.

26. நமிநந்தியடிகள் நாயனார்

எரிவல னேந்தும் நந்தம்
ஈசர்க்கு நீர் நீர் கொண்டே
எரிவிளக் கேற்றும் என்ற
எக்கராம் அமணர் காண
எரியகல் நீர் கொண் டேத்தும்
எம்பிரான் 'தொண்ட ராணி'
விரிபுகழ் நம்பி நந்தி
விறல் நினைந் தன்பு செய்வாம்.

**27.** திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்

காழி மா நகர் வந்துதித்தவர்
கவுரி பாலமு துண்டவர்
கான முந்தமி ழுந்துலங்கிடு
கவிக ளேபொழி நாவலர்
கன்மி தந்திட ஓதி உய்ந்த அக்
கவியை "அப்பரே" என்றவர்
பாழி தாளநற் சிவிகை சின்னமும்
பந்தரும் பெறு பாவலர்
பனிச்சு ரம்முயல் விடமொழித்தவர்
பாடியே பெறு காசினர்
பண்டை மாமறைக் கதவடைத்தவர்
பாண்டி யற்கருள் செய்தவர்
ஆழி மாகடல் அன்ன கூடலில்
அமணிருட்டை அகற்றினோர்
ஆற்று நீரும்நெ ருப்புமே மொழி
ஆணை யிற்செல வைத்தவர்
ஆண்ப னையது காய்க்க வைத்தவர்
ஆயி ரம்பொன்கள் பெற்றவர்
ஏழு லோகமும் அற்பு தங்கொள
என்பு பெண்ணுரு ஆக்கினோர்
எழில் மணத்திடை வந்த வர்க்கெலாம்
ஈறில் நற்பதம் ஈந்தவர்
எந்தை ஞானசம் பந்த மூர்த்தியே
என்னு யிர்த்துணை யாவரே.

**28.** ஏயர்கோன் கலிக்காம நாயனார்

மன்னவ! விடைவரு மாதேவ!
 * வழிவழி யடிமையன் நானன்றோ?
* என்னிது! புதியஓர் தொண்டனுற்றோ
 * இப்பிணி தீர்த்திடல் இதுஅன்றோ?
துன்னரும் உன்னையோர் பெண்பாலே
 தூது விடுத்தவன் முகம் பாரேன்,
என்னுமவ் வேயர்கோன் கலிக்காமர்
 என்துணை யாவரே நாள் நாளும்.

**29** திருமூல நாயனார்

ஆயனன் மெய்யில் ஆத்துயர் நீங்க
 அடைவுற்றோ
மாயிருள் நீக்கும் மந்திர மாலை
 மறை நூல் மூ
வாயிரம் பாடல் ஆண்டினுக் கொன்றாய்
 அருள் மூலர்
தாயினும் நல்லர் என்னையும் ஆள்வார்
 தயை கூர்ந்தே.

**30.** தண்டியடிகள் நாயனார்

கண்டு செய்யக் கண்ணி லாது
 கயிறு தொட்டுக் குளந்தொடும்
தொண்டி கழ்ந்த சமணர் கண்கள்
 தொலைய அஞ்சி அஞ்சியே

---

* இந்த பாகத்துக்குப் பதிலாக—
"வயலினில் நீரிலே நிலந்தருவேன்
என்ன மொழிந்து நிலந்தந்த
ஏற்றநிறைந்த பெருந் தொண்டர்"—என்னும் பாடமும் ஆம்.

மண்டி ஓடத் தமது பார்வை
வரம கிழ்ந்த திருவினர்
தண்டி யடிகள் கழல்கள் என்றும்
தழைக என்னெஞ் சதனிலே.

## 31. மூர்க்க நாயனர்

எந்தவகை யேனுமடி யார்களுண வேண்டி
அந்தவகைக் காகநிதஞ் சூதுவிளை யாடி
வந்தபொருள் எந்தையடி யார்க்குதவ வைத்த
சிந்தைதெளி மூர்க்கர் புகழ் செப்பிமகிழ்வேனே.

## 32. சோமாசி மாற நாயனர்

ஏருரும் அம்பர் நகர்வாழ வந்த எழிலாளர்
சீருரு நம்பர் மகிழ்வேள்வி செய்த மறையாளர்
ஆருரர் காட்ட அரனரி னுடல் அதுகண்டோர்
நாருரு நெஞ்சர் சோமாசி மாறர் நமையாள்வார்.

## 33. சாக்கிய நாயனர்

சைவ சமயமே மெய்ச்சமயம் ஆகும்
சங்கர னே ஒரு மெய்த்தெய்வம் ஆகும்
எவ்வ முறும்பிற சமயமென ஓர்ந்தே
இடைவெளி உள்ளதொர் லிங்கமிசை அன்பால்
உய்வகை நேடியே கல்லெறிந்தே நித்தம்
ஒருமை மனத்துடன் அர்ச்சித்த மேலாம்
தைவிக வாழ்க்கைகொள் புத்தர்பிரான் நங்கள்
சாக்கிய ரைத் தொழல் பாக்கியமே கண்டீர்.

---

குறிப்பு: ஒவ்வொரடியிலும் ஈற்றுச் சீரை விட்டாலும் பாடல் அமையும்

### 34. சிறப்புலி நாயனார்,

வேரி வார்பொழில் ஆக்கூரி லேவரு வேதியர்
மாரி யென்ன அடியவர்க் கீந்தருள் வள்ளலார்
சீரொ டைந்தெழுத் தோதிடல் வேள்விகள்செய்தவர்
ஏரி யைந்த சிறப்புலி யார்கழல் ஏத்துவாம்.

### 35. சிறுத்தொண்ட நாயனார்

ஏர்கொள் மாவிரதி யாரவர் உண்ணச்
சீர்கொள் தன்னுடைய செல்வனை ஈர்ந்தே
நார்கொள் நல்லுணவு நல்கிய வீரச்
சூர ரான சிறுத் தொண்டரைச் சொல்வாம்.

### 36. சேரமான் பெருமாள் நாயனார்

தேருமா பூஜையின் முடிவிலே சிலம்பொலி
செவியிற் பெற்றார்
ஓருமா ரூரராம் நம்பியின் தோழமை
உரிமை யுற்றார்
ஏருலாங் கயிலையில் எழிலுலாப் பாடியே
இன்ப முற்றார்
சேரமா னயனார் அவர் பெரும் புகழது
செப்பற் பாற்றோ?

### 37. கணநாத நாயனார்

ஆழி யானும் அறியா அண்ணல் அருட்கொண்டே
*பாழி உலகிற் பரவ வேண்டிப் பாடுற்றே
காழி வேந்தர் கழலைப் போற்றுங் கணநாதர்
வாழி யென்ன நிதமும் போற்றி வாழ்த்துவாம்.

---

* பாழி = பெருமை,

## 38. கூற்றுவ நாயனார்

மாற்றலர் பலரை வென்று முடிசூட வேண்டி
வளர் தில்லை அந்தணரையே
ஆற்றவும் வேண்டி நின்றும் அவரே மறுக்க
அயர்வுற்ற அந்த அமயம்
** ஏற்றவர் கனவில் நல்கு * பதமே முடித்த
இசையோடும் ஆட்சி அது செய்
கூற்றுவ நாயனாரின் அடியே பணிந்து
குணமே உரைத்து மகிழ்வாம்.

## 39. புகழ்ச்சோழ நாயனார்

மாமலர் சிந்திய யானையை வாட்டிய
வாளார் சீரார் எறிபத்தர்
தோமிலர் என்றறி ஞானமிகுந்தவர்
சூழ்போர் பட்டோர் தலைக்கண்ணே
பூமரு புன்சடை கண்டு குலைந்தெரி
புக்கே மிக்கோர் புகழ்ச் சோழர்
நாமமென் நாவினில் ஆசையோடே சொலும்
நன்னாள் எந்நாள் என்பேன் நான்.

## 40. நரசிங்க முனையரைய நாயனார்

முனைவர் இங்கிவர் காமக் குறிகளே என்றே
அயலினர் புறம் போகத்
தினையும் அருவருப் பில்லேன் இவரொரு
திருநீறணி தரு தேகத்தர்

** ஏற்றவர் = விடையேறி ; சிவன் : * பதம் = திருவடி

நனைமென் மலரணி நாதன் அடியவர்
என்றே பணிவுறு நரசிங்க
முனையர் கழலடி அது என் தலைமிசை
சூடும் நறுமலர் முப்போதும்.

## 41 அதிபத்த நாயனார்

அதிபக்தி யோடு வலை வீசி வந்து
தூமை மீனி லொன்று கபிலைக்
கதிபர்க்கீ தாக வலைவிட்ட நாளில்
நவரத்ன மீன மதுவே
பதிவுற்ற போது முசியாது மீனை
* அலைவிட்ட பண்பு நலமார்
அதிபத்த ரான அதிபத்தர் பாத
மதிபக்தி யோடு மடைவாம்.

## 42. கலிக்கம்ப நாயனார்

இந்த ஓரடியார் முன்பு நம்பணி செய்
ஏவ லாளரென எண்ணவே
சிந்தை யோசனையில் அடியர் கால்கழுவ
சிறிது தன்மனைவி தாழ்த்தலும்
நொந்து தன்மனைவி கைதடித் தடியார்
கால் விளக்கியரு ளாற்றினார்
எந்தை தூயர்கலிக் கம்பர்சீ ரடியை
என்று மேதொழுது வாழ்த்துவாம்.

---

* அலை = கடல்

## 43. கலிய நாயனார்

என்மிடற் றேயரிந் தூற்றும்
இரத்தம் அகலிலிட் டெண்ணெய்
இன்மையால் ஏற்றுவன் தீபம்
என்றறுத் திடுதலும் ஈசன்
தன்கரத் தாற்றடை செய்து
தண்ணருள் காட்டிடப் பெற்ற
தன்ம நிலையர் கலியர்
தாண்மலர்க் கன்புசெய் வாமே.

## 44. சத்தி நாயனார்

கடிமலர்க் கொன்றை காதல்செய் தேவின்
அடியரை இகழ்வோர் அவர்கள்தம் நாவைத்
துடிதுடித் தறுக்குந் தொண்டுசெய் சத்தி
அடிகள்தம் அடிகள் அடியனுக் கரணே.

## 45. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

எண்பாவும் ஈசன் அமர்ந்தருள் இடமெலாம்
பண்பாவும் அன்புடன் நாடிப் பரவியுமே
வெண்பாக்கள் பாடி விளங்கிய ஐயடிகள்
நண்பாருங் காடவர் கோன்கழல் நாடுவமே.

## 46. கணம்புல்ல நாயனார்

மிடிகொள் நிலையில் விளக்கேற்றுந் தொண்டு
முடிகொள்ளா வாறங்கு முன்னி முடியிய
வடிகொள் விளக்காக மன்ற * எரி பத்தி
குடிகொள் கணம்புல்லர் கோலந் துதித்திடுவாம்.

* எரி—எரித்த—வினைத்தொகை.

## 47. காரி நாயனார்

ஏரெ லாநிறை தண்டமிழ்க் கோவையை இயற்றி
நேரெ லாநிறை வேந்தர்பாற் சொலிவரு நிதியைச்
சீரெ லாநிறை சிவபணிக் காக்கிய சிலர்
காரி யார்கழல் கருத்தினி லிருத்தியே களிப்பாம்.

## 48. நெடுமாற நாயனார்

அன்று காழியர் அண்ணல் நீற்றால்
ஈன்று சைவமே நண்ணுஞ் சீரான்
நின்ற சீர்நெடு மாறன் நீடு
பொன்றி டாப்புகழ் போற்றி வாழ்வாம்.

## 49. வாயிலார் நாயனார்

தாயிலார் வாழவே சந்ததம் தம்மனம்
கோயிலாச் செய்தவர் குரைகழல் போற்றிநன்
நேயமே அமுதென நிவேதனஞ் செய்த அவ்
வாயிலார் நாயனார் வண்புகழ் வாழ்த்துவாம்.

## 50. முனையடுவார் நாயனார்

பொருதிற லில்லாதார் பொருட்டுவெம்
முனைசென்றே
மருவலர் தமைவென்று வருநிதி ,
களையெல்லாம்
பரசிவ னடியார்தம் பாற்படுத்
தூக்கிறலார் .
பெருவிறல் முனையடுவார் பெரும்புகழ்
பேசுவமே.

**51.** கழற்சிங்க நாயனார்

எந்தை பூவை எடுத்தாள் இவளென்று
வந்து சீறி மனையாள் கரத்தையே
சிந்த வெட்டுஞ் சீலர் கழற்சிங்கர்
எந்த நாளும் இருப்பர் எமதுளே.

**52.** இடங்கழி நாயனார்

கண்ணுதலான் அடியவர்க்காக் கவர்ந்தேன்
றும் நெல் என்னலும் தம்
எண்ணில்பெரும் பண்டாரம் ஈசன்
அடியார் கொள்ளை கொள
நண்ணுக என்றே விடுத்த நல்லார்
எங்கள் இடங்கழியார்
அண்ணலவர் அன்பினுக்கே அடங்கா
மகிழ்ச்சி கொள்வோமாக.

**53.** செருத்துணை நாயனார்

* அண்டர் பிரானவர்க் காம்மலரை அங்கே
கண்டுடன் மோந்த அக் காரிகைதன் நல்ல
துண்ட மதையொரு துண்டமதா அன்றே
கண்ட செருத்துணை கால்பணிவம் நன்றே.

**54** புகழ்த்துணை நாயனார்

பஞ்சமத் துற்றிட வாடி ஒடுங்கிய மெய்யர்
படும் பசியால்
நஞ்சிவ னார்முடி மஞ்சன நீர்க்குடம் வீழ
நடுங்கிடலும்

* ஈற்றுச் சீரை அடிதோறும் விட்டாலும் பாடல் பொருள் தரும்.

அஞ்சுத லேனினிக் காசது நல்குவ னென்றரா
ளூர் மொழிய
உஞ்ச புகழ்த்துணை யார்புக ழேசொலி உள்ளம்
உவந்திடுவாம்.

## 55. கோட்புலி நாயனார்

உந்துறு போரினில் நின்றிவண் மீளவும்
உற்றிடு மந்தவொர் நாள் வரையில்
எந்தை பிரானடி யாரவ ருண்ணா
இருக்குமிந் நெற்குவை யிங்கெவரும்
சொந்தம தாக எடுத்த லடாதெனும்
அவ்வுரை சோர எடுத்தவர்கள்
சிந்திட வாள்கொடு சிந்திய கோட்புலி
திண்ணிய பத்தியை எண்ணுவமே.

## 56. பூசலார் நாயனார்

காசு கிடையாமை கண்டு சோர்வின்றி
நேச மனத்தின்கண் நிமலர்க் கொருகோயில்
ஆசை யதுகொண்டே அமைத்த நின்றவூர்ப்
பூச லார் பாத பூசை புரிவோமே.

## 57. மங்கையர்க் கரசியார்

திங்கள் சூடிய தேவின்
சிவநெறி தழைத்திட வேண்டி
எங்கள் சண்பையர் கோனால்
இருந்தமிழ் நாட்டினிற் சைவம்

பொங்கு மாறருள் செய்த
புண்ணியப் பெண்ணினல் லாளாம்
நங்கை மங்கையர்க் கரசி
நளினமெல் லடிகளே போற்றி.

## 58. நேச நாயனார்

சாலியர் நற்குலம் வந்தவர் தம்மனம்
சங்கரர் தாளிணைக்கும்
வாலிய நன்று திருவைந் தெழுத்துக்கும்
தங் கை மறையறியாச்
சூலி பணிக்குமங் காக்கிய சீலர்
சிவனடித் தொண்டருக்கே
ஏல உடைகோ வணங்கீள்நெய் தேதரு
நேசரை ஏத்துவமே.

## 59. கோச்செங்கட் சோழ நாயனார்

முந்தைப் பிறப்பதனில் மொய்ம்பார்
சிலம்பி யாய்ப்பக்தர்
எந்தைக் கிழைத்தனன்நான் இந்தப்
பிறவி யிடர்தீர
வந்தே னெனமதித்து மாடக் கோயில்
பல செய்தே
சிந்தை யுகந்தவன் கோச் செங்கட் சோழன்
கழல் போற்றி.

## 60. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

மாமதுரைப்பதியில் இறை சொற்படியிட்ட பொன்
மணை யிருந் திசை பல வகை வகை புகல்வர் ;
பூமகள் பூசை செயுங் கமலாலய ஊரினிற்
புது வழி வட திசை புகுபவர் தொழவே ;
காமரு காழியர்கோன் தமிழ்ப் பாடல்கள் யாழினிற்
கலந் திசை பொலிந் திடக் கலைதரு புலவர் ;
வாமகன் மாமணத்தில் எழிற் சோதியிற் சேருமெய்
வழா தபாணனர் கழல் வழிபடல் குணமே.

## 61. சடைய நாயனார்

நம்பியாரூரரைத்
தம்புதல் வன்னெனும்
எம்பிரான் சடையரை
நம்பி நான் நாடுவேன்.

## 62. இசை ஞானியார்

அசையாத அன்பராரூரரின்
இசையேறும் அன்னையாரென்னுமவ்
விசைஞானி யார்புகழ் என்றுமே
நசையோடும் என்னுளம் நாடுமே.

## 63. சுந்தரமூர்த்தி நாயனார்

சீரார் திருக்கயிலைச் செம்மலார் அடியின்முன்
வாரா வெயன அழைக்க வந்தவரார்?—பேராரும்

பூங்கயிலை வெற்பிற் புனையிழையார் மேற்காதல்
தாங்க அதனல் தரணியிலே—பாங்கு பெறு

நாவலூர் வந்துதித்த நம்பர் யார்? ஆதிசைவ
மேவு குலத்துவந்த மேன்மையர் யார்?—பூவியக்கும்

ஆரூரர் என்ற பெய ராலழைக்கப் பட்டார் யார்?
பேரூர் நரசிங்கர் பேணிநின்ற—சீரார் யார்?

அந்த மணத்தில் அரனர் வலியவந்தே
இந்த மணப்பிள்ளை என்னடிமைச்—சொந்தமெனக்

கூறி ஆ ளாகக் கொளப்பட்டார் யாரே? பின்
ஏறூர்ந்தார் வன்றொண்டா! என்றழைத்தே
—ஊறின்றிப்

பித்தா என் றென்னை நீ பேசிட் டழைத்ததனல்
'பித்தா' எனத் தொடங்கிப் பீடுபெற—வைத்தா

தரவுடனே பாடென்ன அங்கம் சிலிர்த்தங்
கரவணிந்தார் தம்புகழை அன்று—பரவினர் யார்?

தாணு உறையும் தலம்பரவச் செல்லுங்கால்
மாணுறு சித்தவட மாமடத்தில்—பேணுதுயில்

கொள்ளும் பொழுது குணமிலிவந் தவ்விடத்தில்
உள்ளி மிதிக்க உயர்ந்தோர் யார்?—வள்ளலெம

தாரூரர் தண்ணருளால் அம்மை பரவையை யன்
றாரூரி லேமணந்த அன்பர் யார்?—சீருருந்

தொண்டத் தொகைபாடிச் சுத்த நெறிச்சைவம்
எண்டிக் கிலக இயற்றினர் யார்?—குண்டையூர்

அன்றுவரு நெல்மலையை ஆரூரி லேவரச்செய்
வென்றிபெறு நோன்மையர் யார்? மெய்ந்நிறைந்த
—நன்றிபுகல்

கோட்புலியார் நட்புக் குணத்துக் கிணங்கிப்போய்
ஆட்பட்ட அன்னூர் அருமை மக்கள்—வாட்பட்ட

கண்ணியச் சிங்கடியைக் கன்னி வனப்பகையை
எண்ணித்தம் மக்களா என்றவர் யார்?
—உண்மையுரை

பாவாற் செங் கற்கள் பசும் பொன்னு கக்கண்ட
கோவார்? பின் கூடலையாற் றூர்த் தப்-போவார்க்குக்

கூடலை யாற்றூர் குறுகு வழி காட்டியகல்
லாடல் செயப் பெற்றூர் ஆரோ? பின்—நாடி

பழமலையிற் பெற்ற பசும்பொன்னை ஆற்றில்
விழவிட்டே ஆரூரில் மேலா—எழுத் தூளத்தில்

பாடி வரப்பெற்ற பண்பாற் பரவையுளம்
நாடி மகிழ்வித்த நம்பர் யார்?—ஈடிலியே

தேடிப் பொதிசோறு தின்குருகா வூரருகிற்
கூடித் தரப்பெற்ற கோமான் யார்?—வீடு தொறும்

கச்சூரி லையரவக் கச்சையவன் பிச்சையெடுத்
திச்சை யுடனளிக்க என்ற ஒரு—விச்சையர் யார்?

ஓணகாந் தன்தளியில் உம்பர்பிரா னைப்பாடிப்
பேணி நின்ற பொன்கொள் பெரியோர் யார்?
—காணுமகிழ்

ஒற்றியூர்ச் சங்கிலியை ஓர்மகிழ்க்கீழ் நன்மணஞ்செய்
வெற்றி படைத்த விறலோர் யார்?—அற்றைநாள்

சொற்பிறழ்ந்த குற்றத்தாற் சோர்வுபடப் பார்வையிழந்
தற்பனெனை ஆண்ட அரசே நான்-சொற்பிறழ்ந்த

குற்றம் பொறுக்க என ஊன்றுவதோர் கோலருளப்
பெற்றபெருஞ் செல்வர்யார்? பேரன்போ-டுற்றநகர்க்

காஞ்சியிலே பா அணிந்து கண்ணொன்று பெற்றவர்யார்?
வாஞ்சையுடனே திருத்தி வன்பொய்கை-தாஞ்சேர்ந்து

மெய்யுற்ற நோய்விலகும் மேன்மை படைத்தவர் யார்?
பொய்யற்றூர் வாழாரூர் புக்குமற்றை—வையுற்ற

கண்பார்வை வேண்டியே காதல் வகை பாடிக்
கண்பார்வை பெற்றுக் களித்தவர் யார்?—என்பாவும்

அந்தப் பரவையிடம் ஐயரையே தூதனுப்புஞ்
சொந்தம் படைத்திட்ட தூயர் யார்? — இந்தவகை

ஈசனைத் தூது விட்டார் யாரே! இவர் முகத்தை
நேசமுடன் நான்பாரேன் நிச்சயமென்—றேசின

ஏயர்கோன் தன்நட்பை ஈசன் திருவருளால்
ஏயும் வகைபெற்ற இன்பர் யார்? —நேயமுடன்

நாடிவந்த சேரமான் நாயனார் நட்புற்ற
ஈடிலாச் செல்வர் யார்? ஏற்றிவரும்—ஓடுநதி

அங்கே வழிவிடவே ஐயாறு கண்டோர் யார்?
நங்கோமான் சேரமான் நல்கியபொன்-கொங்கேபோம்

ஆற்றிலே ஆறலைக்கப் பட்ட வரும் பொருள்கள்
ஈற்றில் தரப்பெற்ற ஏந்தல் யார்? —கூற்றில்

வருமுதலை யுண்ட மதலைவர வேண்டி
ஒரு முதலைப் பாடி உயிர்பெற்—றருமதலை

வந்திடவே செய்த தவ வள்ளல் யார்? வெண்களிற்றில்
எந்தை கயிலை யிடஞ்சேர்ந்த—அந்தணர் யார்?

தம்மைவிட் டிங்கே தரிக்க இயலாத
செம்மைப் பரியேறிச் சேரர்வர—அம்மையப்பர்

முன்னிலையில் மற்றவரை முன்னிலையச் செய்தங்கு
முன்னிலையி லேயமர்ந்த மொய்ம்பர் யார்?—நன்னியமத்

தன்னவரே என்றாயும் அன்னவரே என்பொருளும்
அன்னவரே என்னுடைய ஆருயிரும்—அன்னவரே

உண்மணியாய் நின்றென் உளத்தே ஒளிபெருக்குங்
கண்மணியாம் சுந்தரரே காண்.

## 63A. தொகை யடியார்

தில்லைவா ழந்தணர் திருத்தாள் போற்றி
பொய்யடிமை யில்லாத புலவர்தாள் போற்றி
பத்தராய்ப் பணிகின்ற பண்பர் தாள் போற்றி
பரமனையே பாடுகின்ற பான்மையர் தாள் போற்றி
சித்தம் சிவன் பாலே சேர்ப்பவர் தாள் போற்றி
திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தாள்கள் போற்றி
முப்போதுந் திருமேனி தீண்டுவர் தாள் போற்றி
முழுநீறு பூசிய முனிவர் தாள் போற்றி
அப்பாலும் அடிச்சார்ந்த அடியர் தாள் போற்றி

## 63B.

வகையறிந்து தொண்டத் தொகைவிரித்த நந்தம்
நம்பியாண்டார் நம்பி நலத்தாள்கள் போற்றி
தொண்டர்சீர் விரிவெலாம் கண்டமா தவர் சிவ
பாக்கியப் பயனும் சேக்கிழார் பெருமான்
சிறந்தநன் னலந்தரு திருந்தடி போற்றி
போற்றி போற்றி அரன் திருப் புகழே.

திருச்சிற்றம்பலம்.

---

வாழ்த்து

வாழி அறுபத்து மூவர் மலரடிகள்
வாழியிப் பாமாலை மண்ணுலகில்—வாழியவே
இந்நூல் வரச் செய்த என்னிளவல் தன் கிளையோ
டெந்நாளும் இன்புற் றினிது.

உ

# துதிப்பா - கருத்து

## காப்பு

திருநிறை செல்வராம் அறுபத்து மூவர் சிறப்பைப் பா வகையாற் கூறக் கஜமுகாசுரனை அட்ட ஆனைமுகப் பெருமானது பேரருளே துணையாகும்.

## I. திருநீலகண்ட நாயனார்

"நீலகண்டம" என்னும் ஆணையில் வைத்த அச்சமும் அன்புங் காரணமாகத் தமது மனைவியைத் தொடாது நீத்து, மறைந்த ஓட்டின் வழக்கின் பயனாக இளமைப் பருவத்தை (இறைவன் அருளால்) அடைந்த திருநீலகண்டரின் தாளிணையைச் சிந்திப்பாம்.

## 2. இயற்பகை நாயனார்

இல்லை என்ற சொல் தம்மிடத்தில் இல்லை என்னும் படியாக, "உமது இல்லாளைத் தருக" எனக் கேட்ட பெருமானுக்கு இல்லை என்னாது தம் மனைவியைக் கொடுத்த இயற்பகை நாயனாரை வாழ்த்துவாம்.

## 3. இளையான்குடி மாற நாயனார்

அடியாருக்கு உணவளிக்க வேண்டி மின்னலிலும் மழையிலும் சென்று செந்நெல் கொண்டுவந்து பலவித கறிகள் செய்க எனத் தமது மனைவி கையிற் கொடுத்த இளையான்குடி மாறனாரது திருக்கழலைப் போற்றிப் பணிவாம்.

## 4. மெய்ப்பொருள் நாயனர்

பொய் வேடத்தையும் மெய் வேடமாகக் கருதி உய்ந்த மெய் உணர்வு மிக்கவரும், 'தத்தா நமர்' என்று கொலைஞனையும் தமராகப் பாவித்துக் காத்த வருமான மெய்ப்பொருள் நாயனரது சீரைப் பாராட்டி மகிழ்வாம்.

## 5. விறன்மிண்ட நாயனர்

அடியாரை வணங்காத ஆரூரன் புறகே, அவன் நாடுகின்ற ஆரூர்ப் பெருமானும் புறகே - என வன்மை பேசின பெரும் பத்திச் சீராளரும், திருத் தொண்டத் தொகையை ஆரூரர்பாடுதற்கு மூலகாரணராயிருந்தவரு மான செங்குன்றூர் விறன்மிண்டர் வாழ்வாராக.

## 6. அமர்நீதி நாயனர்

"ஈரக் கோவணத்துடன் நிற்கின்றேன். நான் உம திடம் கொடுத்த கோவணத்தைக் கொடு" என்று கேட்க, அக் கோவணத்தைக் காணமாட்டாது தடு மாறின போது, 'நான் தந்த கோவணத்தின் எடைக்கு நேரான பொருளையாவது தா' என்று கேட்க, மனைவி யும் மகவும் தாமுமாகத் தராசில் ஏறித் துலையை நேர் நிறுத்தின அமர்நீதியாரின் அறிவை ஏத்துவாம்.

## 7. எறிபத்த நாயனர்

சிவகாமி ஆண்டார் என்னும் சிவனடியாரது மலர்க் கூடையைப் பற்றி எறிந்த வலிய ஆனையை அட்ட அதி வீரரும், அடியார்க்குத் துணை புரிவதையே தமது கடமையாகக் கொண்டவருமான எறிபத்த நாயனரது கழலை ஏத்துவாம்.

## 8. ஏனாதிநாத நாயனார்

போரில் வந்து எதிர்த்தவனும் திருநீறு இடாதவனுமான அதிசூரன் என்பான் திருநீறு இட்டிருந்ததைக் கண்டவுடன் அவனுடன் போர் புரியாது அவன் கையால் தமது உயிரையே இழக்க உண்மைப் பத்தரும், திருநீறே சார்பாம் செல்வமாம் என்னப் பாராட்டி வந்த அருமைக் குணத்தவருமான ஏனாதிநாதரது பெருமையைப் பேசுவாம்.

## 9. கண்ணப்ப நாயனார்

தாம் அன்பு வைத்த அண்ணலது கண்ணில் குருதி வரக் கண்டு தரியாது தவித்து இரங்கி, ஒரு சிறிதும் தாழாது தமது கண்ணையே பறித்து அப்பின பெருமையாளராங் கண்ணப்பரது பாதமலரை ஏத்தி வாழ்வாம்.

## 10. குங்கிலியக் கலய நாயனார்

தம்மை வறுமை வந்து சூழ்ந்த போது, மனையாளது தாலியை மாற்றி வந்த பொருள் கொண்டு குங்கிலியம் வாங்கித் தமது குங்கிலியப் புகைத் தொண்டை வழுவாது நடத்தினவரும், திருப்பனந்தாளில் பெருமானது திருவுருவம் சாய்ந்திருந்ததை நிமிர்த்தி வைத்த நீள் தவத்தினருமான குங்கிலியக் கலய நாயனாரைக் கருதிப் புகழ்வாம்.

## 11. மானக் கஞ்சாற நாயனார்

தமது புதல்வியின் திருமண நாளில் வந்த முனிவர் 'இம்மண மகளின் கூந்தல் பஞ்சவடிக்கு உதவும்' என்று கூற, உடனே வாள் கொண்டு மகளின் கூந்தலை

அரிந்து முனிவருக்கு உதவிய பெருமான் மானக் கஞ்சாறரது புகழை வாழ்த்துவாம்.

## 12. அரிவாட் டாய நாயனார்

பசியின் கொடுமையால் தள்ளாடி விழ, இறைவனுக்கு நிவேதனத்துக்காகத் தாம் எடுத்துச் சென்ற செங்கீரை, நெல், மாவடு முதலிய கமரில் விழுந்து சிந்தக் கண்டு மனம் நொந்து அரிவாளினால் தமது கழுத்தை அரியும் போது இறைவன் 'விடேல்' என்னும் ஓசையோடு சிந்தின மாவடுவை அமுது செய்யக் கண்டு உகந்த (அரிவாள்) தாய நாயனாரது பதத்தைக் கருதுவாம்.

## 13. ஆனாய நாயனார்

யாவரும் மெச்சும் குழலின் இசை யமுதை அரனுக்கு இனிதாக அன்புடன் ஊட்டின ஆனாய நாயனாரது கழல்களைப் பணிந்து விரும்புவாம்.

## 14. மூர்த்தி நாயனார்

சந்தனக் கட்டை எங்கும் கிடையாமையால் தமது கையையே கட்டையாக வைத்து தேய்த்தவரும், இறைவர் தமக்கு அளித்த அரசாட்சியை நடத்தினவருமான மூர்த்தி நாயனாரை வாழ்த்துவாம்.

## 15. முருக நாயனார்

திருப்புகலூர் வர்த்தமானீச் சுரத்துப் பெருமானுக்குப் பலவகை மாலைகளைச் சூட்டி அலங்கரித்து மகிழ்ந்தவரும், சம்பந்தப் பெருமானுக்கு நண்பரும், அப்பெருமானது திருமணச் சோதியிற் கலந்தவருமான முருக நாயனாரைப் போற்றுவாம்.

## 16. உருத்திர பசுபதி நாயனார்

நீரில் நின்றபடியே சிவபிரானைத் தியானித்து ருத்ர ஜெபம் செய்த உருத்திர பசுபதியாரைக் கருதித் தொழுவாம்.

## 17. திருநாளைப் போவார் நாயனார்

திருப்புன்கூர்ச் சிவனுக்குத் தொண்டு பல செய்தவரும், தில்லையைத் தரிசிக்கும் ஒரு நாள் கிட்டுமோ என உருகி நின்றவரும், 'நீ எரி மூழ்கி வா' என்று இறைவன் ஓத அங்ஙனமே எரியில் மூழ்கிச் சிவ முனிவர் வேடம் பொலிய எழுந்தவருமான திருநாளைப் போவாரின் திறத்தைப் பேசி வினைகளை ஒழிப்பாம்.

## 18. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

தம்மிடம் வந்த அடியவரின் அழுக்கேறு கந்தையை மாலைப் பொழுதுக்குள் துவைத்துத் தருவன் எனச் சொல்லிக் குளத்து நீரில் துவைக்கும் போது அடர் மழை விடாது பெய்ய, 'ஐயோ! அடியவரது துணியை எப்படி உலர்த்துவேன், அபசாரப் பட்டேனே, இந்தப் பாறையில் என் தலையை உடைத்துக் கொள்வேன்'— எனக் கூறித் தலையை மோதும்போது இறைவரே தமது திருக் கரத்தால் தடுக்கப் பெற்ற திருவாளராம் திருக்குறிப்புத் தொண்டரது அருட் பேற்றைச் சிந்தித்து மகிழ்வாம்.

## 19. சண்டேசுர நாயனார்

சிவ பூஜைக் கென்றிருந்த பாற்குடத்தைத் தமது தந்தை வந்து இடறத், தாதை யென்றும் பாராது அவரது தாளைத் தடிந்து, நிர்மாலியம், தொண்டர்க்குத் தலை

வன் என்னும் பதவி முதலியவற்றை இறைவர் பால் பரிசாகப் பெற்ற சண்டேசுரக் குரிசிலை நினைந்து உய்வாம்.

## 20. திருநாவுக்கரசு நாயனார்

ஐந்தெழுத்தாகிய தெப்பத்தைக் கொண்டு நீர்க் கடலையும் பிறவிக் கடலையும் கடந்து நின்றவரும், வஞ்சக நெஞ்சினராம் அமணரது சூழலை விட்டகன்று வந்த மாதவரும், வாசியிலாத காசு பெற்றவரும், மறைக் கதவத்தைத் திறக்கப் பாடினவரும், விடம் தீர்த்தவரும், கயிலைக் காட்சியைத் திருவையாற்றிற் பெற்றுக் களித்தவருமான உத்தமராம் அப்பரை நினைந்து உய்வாம்.

## 21. குலச்சிறை நாயனார்

சம்பந்தப் பெருமானது திருவருளாந் துணை கொண்டு பாண்டி நாட்டிற் சைவம் விளங்கச் செய்த நமது குலச்சிறை நாயனாரைப் போற்றுவாம்.

## 22. பெருமிழலைக் குறும்ப நாயனார்

சுந்தரமூர்த்தி நாயனாரின் திருவடித் துணையையே நாடி, அவர் கயிலையை அடையு முன்னரே தாம் கயிலையை அடைந்த யோகீசரராம் பெருமிழலைக் குறும்பரது இயலை நினைந்து துதிப்பாம்.

## 23. காரைக்கால் அம்மையார்

"இஃதென்ன அற்புதம்! இந்த மாம்பழம் வியக்கத்தக்க சுவையுளதா யிருக்கின்றதே! இவள் ஒரு தெய்வம் தான்" என்று அஞ்சித் தமது கணவன் தம்மை விட்டகலத், தாமும் உலகியலை உதறித், திருவாலங்

காட்டிற் கூத்தப் பிரானது திருவடி நீழலில் நின்று களிக்கும் காரைக்கால் அம்மையாரது பாதங்களைச் செம்மையாய் நிதமும் அருச்சிப்பாம்.

## 24. அப்பூதி அடிகள் நாயனார்

சிவ பிரானது திருவடியைச் சிக்கெனப் பிடித்த திருநாவுக்கரசரது திரு நாமத்திலே மிகுந்த பக்தி பூண்ட திங்களூர் அப்பூதியாரின் பாதங்களே எனக்கு இன்பம் தருவனவாம்.

## 25. திரு நீலநக்க நாயனார்

'பேரன்பினால் உன் மனையாள் சிலந்தியை ஊதின அந்த ஓரிடம் தவிர மற்ற இடமெல்லாம் சிலந்தியால் வந்த கொப்புளத்தைப் பார்' என்று இறைவரே தமக்குக் காட்டப் பெற்றவரும், ஞானசம்பந்தப் பெருமானால் பாராட்டப் பெற்றவரும், அப் பெருமானது திருமணச் சடங்கை இயற்றி அங்குத் தோன்றிய ஜோதியிற் கலந்தவருமான நீல நக்கரைப் போற்றி நமது துக்கங்களைக் களைவாம்.

## 26. நமிநந்தி யடிகள் நாயனார்

"எரியேந்தும் உங்கள் இறைவனுக்கு நீர் ஊற்றி விளக்கேற்றும் நீர்" என்று பரிகசித்த அமணர் நாண நீரைக் கொண்டே விளக்குகள் ஏற்றின பெருந் தொண்டராம் நமிநந்தியை நினைந்து அன்பு செய்வாம்.

## 27 திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

காழியில் உதித்தவரும், கவுரி முலைப்பால் உண்டவரும், இசையும் தமிழும் விளங்கக் கவிகள் பொழிந்த

வரும், கல்லே தெப்பமாகக் கொண்ட பெரியாரை 'அப்பரே' என அழைத்தவரும், தாளம், சிவிகை, சின்னம், பந்தர் இவைகளை இறைவரே தரப் பெற்ற வரும், பனிச்சுரம், முயலக நோய், விடம் இவைகளை ஒழித்தவரும், பதிகம் பாடிக் காசு பெற்றவரும், மறைக் கதவத்தை அடைத்தவரும், பாண்டியனுக்கு அருள் புரிந்தவரும், மதுரையில் அமணிருளை அகற்றினவரும், ஆற்று நீரும், நெருப்பும் தமது ஆணையின் மொழிப்படி பணி புரியப் பெற்றவரும், ஆண்பனையைக் காய் என வைத்தவரும், ஆயிரம் பொன் அரனிடம் பெற்றவரும், எலும்பைப் பெண்ணாக்கினவரும், தமது திருமணத் துக்கு வந்தவர்க்கெல்லாம் வீடு பேறு அருளியவரும் ஆன எந்தை திருஞானசம்பந்த மூர்த்தியே என் உயிர்த் துணையாவர்.

## 28. ஏயர்கோன் கலிக்காம நாயனர்

"நான் வழியடிமையாயிருக்கவும் புதிய தொண் டன் ஒருவன் வந்து எனது பிணியைத் தீர்ப்பது நன்றோ! இறைவா! அனுகற்கரிய உன்னை ஒரு பெண்ணிடத் தூது அனுப்பினவனுடைய முகத்தை நான் பாரேன்"-என்று சபதமிட்ட ஏயர்கோன் கலிக்காமரே எனக்கு நாளும் துணையாவார்.

## 29 திருமூல நாயனர்

இறந்துபட்ட ஆயன் உடலில் பசுக்களின் துயரை நீக்க வேண்டிப் புகுந்தவரும், உலக இருளை நீக்கத் திரு மந்திரமாலை மூவாயிரம் பாடல் ஆண்டுக்கு ஒன்றாக இயற்றினவருமான திருமூல நாயனர் என்னையும் ஆண்டருளுவாராக.

## 30. தண்டி யடிகள் நாயனார்

பார்வை யிலாமையால் கயிற்றைப் பிடித்துக் கொண்டு குளம் தோண்டும் தமது தொண்டை இகழ்ந்த சமணர்கள் பார்வையை யிழக்கவும், தமது பார்வை ஒளி பெறவும் பெற்ற செல்வர் தண்டியடிகளின் திருவடி என் நெஞ்சில் தலைப்பதாக.

## 31. மூர்க்க நாயனார்

எங்ஙனமாவது அடியார்களுக்கு உணவளிக்க வேண்டிச், சூதாட்டம் ஆடி அதனால் வந்த பொருளை அடியார்க்கு உதவிய அறிஞர் மூர்க்க நாயனாரது புகழைச் சொல்லி மகிழ்வேன.

## 32. சோமாசி மாற நாயனார்

அம்பர் நகரில் வாழ்ந்தவரும், வேள்விகள் இயற்றிய மறையாளரும், ஆரூரர் காட்ட அரனாரது திருவிளையாடலைக் கண்டு மகிழ்ந்தவருமான சோமாசி மாறர் நம்மை யாண்டருளுவார்.

## 33. சாக்கிய நாயனார்

சைவ சமயமே மெய்ச் சமயம், சிவனே மெய்த் தெய்வம் என அறிந்து, வெளியில் இருந்த ஒரு லிங்கத்தைக் கல்லெறிந்து பூசித்த புத்தர் பிரான் சாக்கியரைத் தொழுவதே பாக்கியச் செயலாம்.

## 34. சிறப்புலி நாயனார்

ஆக்கூரிலே வேதியர் குலத்திற் பிறந்து அடியார் களுக்கு வேண்டியவற்றை அளித்த வள்ளலாய்ப், பல

வேள்விகள் செய்தவராய்த் திகழ்ந்த சிறப்புலியின் கழல்களை ஏத்துவாம்.

## 35. சிறுத்தொண்ட நாயனார்

மகா விரதியர் ஒருவர் உண்பதற்காகத் தம் மகனையே அரிந்து சமைத்த வீர சூரரான சிறுத்தொண்டரது பெருமையைக் கூறுவோம்.

## 36. சேரமான் பெருமாள் நாயனார்

தமது பூஜை முடிவில் கூத்தப் பிரானது நடனச் சிலம்பொலி கேட்கப் பெற்றவரும், ஆரூரரது தோழராம் உரிமை பெற்றவரும், கயிலையில் திருவுலாப் பாடிய பேறு பெற்றவருமான சேரமான் பெருமாளது புகழ் செப்பும் தரத்ததோ!

## 37. கணநாத நாயனார்

சிவனடித் தொண்டை உலகிற் பரப்ப முயன்றவரும், சம்பந்தப் பெருமானது திருவடியைப் பரவிப் போற்றி வந்தவருமான கணநாதரை நித்தமும் வாழ்த்தி வணங்குவாம்.

## 38. கூற்றுவ நாயனார்

அநேகம் பகைவர்களைத் தாம் வென்றிருந்தும் தில்லை வாழ் அந்தணர்கள் தமக்கு முடி சூட்ட மறுப்பதைக் கண்டு சோர்ந்த போது, இறைவரே கனவில் வந்து அவர்தம் பாதமலரைத் தம் முடியிற் சூடும் பேற்றினைப் பெற்று ஆட்சி நடாத்திய கூற்றுவ நாயனாரின் குணத்தைப் பரவி மகிழ்வாம்.

## 39. புகழ்ச் சோழ நாயனார்

மலரைச் சிந்திய யானையை வதைத்த எறிபத்த நாயனாரின் உண்மைப் பத்தி நிலையைக் கண்ட ஞானியும், போரில் இறந்த பகைவர் ஒருவரது புன்சடையைக் கண்டு மனங் கலங்கி எரியில் வீழ்ந்தவருமான புகழ்ச் சோழரது திருநாமத்தை ஆசையுடன் என் நாவிற் சொல்லும் நன்னாள் என்று வருமோ என்பேன்.

## 40. நரசிங்க முனையரைய நாயனார்

அருவருப்பான காமக் குறிகளை ஓரடியாரிடத்தே கண்டும் திருநீறணிந்த இவர் எம்பிரான் அடியார் என்று அவரைப் பணிந்துபசரித்த நரசிங்க முனையரின் திருவடி மலரே நான் முப்போதும் முடியிற் சூடும் மலராம்.

## 41 அதிபத்த நாயனார்

தாம் வீசிய வலையிற் கிட்டிய மீனொன்றைச் சிவபிராற்கு ஆகுக என்று கடலிலே விடும் ஒழுக்கத்தைக் கைவிடாது பற்றி வருநாளில் ஒரு நாள் நவரத்ன மயமான மீனொன்று கிட்டப் பின் வாங்காது அதையும் கடலில் விடுத்த அதிபத்தரான அதிபத்த நாயனாரின் பாதத்தை அதி பத்தியொடும் பரவுவாம்.

## 42. கலிக்கம்ப நாயனார்

வந்த அடியார்களை உபசரித்துக் கால் கழுவும் போது, ஓரடியாரைக் கண்டு இவர் முன் நம்மிடம் வேலையாளாய் இருந்தவரல்லவா என்று சிந்தித்துத் தம் மனைவி சிறிது தாழ்க்கக், கோபங் கொண்டு மனைவியின்

கையைத் தடிந்து அந்த அடியாரின் பாதத்தைத் தாமே விளக்கிய தூயராம் கலிக்கம்பர் பாதத்தைத் தொழுது வாழ்த்துவாம்.

### 43. கலிய நாயனார்

தீபத்துக்கு எண்ணெய் இல்லாமையைக் கண்டு 'என் இரத்தத்தை ஊற்றி விளக்கை ஏற்றுவேன்' என்று தம் கழுத்தை அறுத்துக் கொள்ளும் போது ஈசனார் திருக் கரத்தால் தடை செய்யப்பட்டு அவரது அருளைப் பெற்ற தரும நிலையராம் கலிய நாயனாரது பாதமலருக்கு அன்பு செய்வாம்.

### 44. சத்தி நாயனார்

சிவனடியவரை இகழ்பவரது நாவைத் துடிதுடிக்க அறுக்கும் தொண்டினைப் பூண்ட சத்தி நாயனாரின் திருவடியே அடியேனுக்குக் காப்பு ஆகும்.

### 45. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

சிவ ஸ்தலங்களைத் தரிசித்து அன்புடன் வெண்பாக்களைப் பாடிய ஐயடிகள் காடவர்கோன் நாயனாரின் கழல்களை நாடுவாம்.

### 46. கணம்புல்ல நாயனார்

விளக்கேற்றுந் தொண்டுக்கு முட்டு வாராத வண்ணம் தமது முடியையே விளக்காக ஏற்றி எரித்த பக்தர் கணம்புல்லரின் திருக்கோலத்தைத் துதிப்பாம்.

## 47. காரி நாயனார்

தமிழ்க் கோவை பாடி அரசர் பால் சொல்லிப் பெற்ற நிதியைச் சிவ பணிக்காக்கிய காரி நாயனாரின் கழல்களைச் சிந்தித்துக் களிப்பாம்.

## 48. நெடுமாற நாயனார்

சம்பந்தப் பெருமானால் திருநீறிடப் பெற்றுச் சைவரான சீர்கொண்ட நெடுமாறரது அழியாப் புகழைப் போற்றி வாழ்வாம்.

## 49. வாயிலார் நாயனார்

இறைவர் வீற்றிருக்கத் தம் மனத்தையே கோயிலாக ஆக்கித் தமது அன்பையே அவருக்கு நிவேதனம் செய்த வாயிலார் நாயனாரின் அடிகளை வாழ்த்துவாம்.

## 50. முனையடுவார் நாயனார்

போரில் வெல்ல மாட்டாதார் பொருட்டுப் போர் முனைக்குத் தாமே சென்று வென்று அதனால் வரும் நிதித் திரளைச் சிவனடியார்களுக்கு அளித்த திறமை வாய்ந்த முனையடுவாரின் புகழைப் பேசுவாம்.

## 51. கழற் சிங்க நாயனார்

சிவபிரானுக்குரிய பூவை எடுத்தாள் இவள் என்று கோபித்துத் தம் மனைவியின் கரத்தை வெட்டிய சீலர் கழற் சிங்கரை என்றும் சிந்தையில் வைப்பாம்.

## 52. இடங்கழி நாயனார்

சிவனடியார்களுக்கு அளிக்கும் பொருட்டு உமது நெல்லைக் கவர்ந்தேன் என்று ஒரு அடியவர் கூறக்

கேட்டுத் தமது நெற்குவை, நிதிக்குவை யனைத்தையும் சிவனடியார்கள் கொள்ளட்டும் எனத் திறந்து விட்ட நல்லார் இடங்கழியாரின் அன்பின் திறத்தைக் கண்டு அடங்கா மகிழ்ச்சி கொள்வாம்.

## 53. செருத்துணை நாயனார்

சிவபிராற்குரிய பூவை இவள் மோந்தாள் என்று மோந்த மூக்கை அரிந்து விட்ட செருத்துணை நாயனாரின் கால்களைப் பணிவாம்.

## 54. புகழ்த்துணை நாயனா

பஞ்சத்தாற் பசியால் வாடி மெலிந்து அபிடேக குடத்தை இறைவன் முடியில் விழுத்தி நடுங்குதலும் தமது பசி கெட இறைவன் அருளிய படிக்காசைப் பெற்று உய்ந்த புகழ்த்துணை நாயனாரின் புகழை ஓதி உய்வாம்.

## 55. கோட்புலி நாயனார்

போரினின்று நான் மீண்டு வருமளவும் சிவனடியார்களுக்காக வைத்த இந்நெற் குவையைத் தொடக்கூடாதென்று சொல்லியும் கேளாது எடுத்தவர்களை வாள் கொடு வீசிய கோட்புலியாரின் பத்தியைச் சிந்திப்பாம்.

## 56. பூசலார் நாயனார்

காசு கிடையாமை கொண்டு சோர்வு அடையாமல் மனத்தாலே ஈசர்க்குக் கோயில் அமைத்த அன்பர் பூசலார்க்குப் பாத பூஜை புரிவாம்.

## 57. மங்கையர்க் கரசியார்

சிவ நெறி தழைக்க வேண்டிச் சம்பந்தப் பெருமானது துணை கொண்டு அவரால் பாண்டி நாட்டிற் சைவம் பெருக வைத்த பெண்ணினல்லாள் மங்கையர்க் கரசியாரின் அடிகளைப் போற்றுவாம்.

## 58. நேச நாயனார்

சாலியர் குலத்தில் உதித்துத் தம் மனம் சிவன் திருவடியைச் சிந்திக்கவும், தமது நா ஐந்தெழுத்தோதவும், தமது கை சிவன் திருப்பணிகள் செய்யவும் வைத்துச் சிவனடியவர்களுக்கு உடை, கோவணம், கீள் நெய்து தந்த நேச நாயனாரை ஏத்துவாம்.

## 59. கோச்செங்கட் சோழ நாயனார்

முற்பிறப்பிற் சிலந்தியாயிருந்து இறைவருக்குப் பந்தரிட்டேன்; இந்தப் பிறவி இடர் தீர வந்துள்ளேன்'—என மதித்து இறைவனுக்கு 'மாடக் கோயில்கள்' பல அமைத்த கோச் செங்கட் சோழரது கழல்களைப் போற்றுவாம்.

## 60. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

மதுரையில் இறைவன் ஆணைப்படி யிடப்பட்ட பொற் பலகையில் இருந்து இசை பல உரைத்தவரும், இலக்குமி பூசித்த திருவாரூரில் புதிதாய் இறைவன் தமக் கென்றமைத்த வடவாயில் வழியாகச் சென்று இறைவனைத் தொழப் பெற்றவரும், சம்பந்தப் பெருமானது பாடல்களை யாழினில் அமைத்து இசை பொலிய வாசித்தவரும், அப்பெருமானது திருமணத்தில்

தோன்றிய ஜோதியிற் கலந்தவருமான திரு நீலகண்ட யாழ்ப்பாண நாயனாரின் கழல்களைப் பணிதலே குணமாம்.

## 61. சடைய நாயனார்

நம்பி யாரூரரை மகவாகப் பெற்ற சடைய நாயனாரை நாடுவாம்.

## 62. இசை ஞானியார்

நம்பி யாரூரருக்கு அன்னையார் என்னும் புகழ் பெற்ற இசை ஞானியாரின் புகழை என் உள்ளம் என்றும் நாடும்.

## 63. சுந்தரமூர்த்தி நாயனார்

திருக் கயிலையிற் சிவபிரான் கண்ணாடியிற் பார்த்து 'வாராய்' என அழைக்க வந்தவர் யார்?

கயிலையிற் பெண்களின் மீது காதலுற்ற காரணத்தால் பூமியில் திரு நாவலூரில் வந்து பிறந்தவர் யார்?

ஆதிசைவர் குலத்தில் வந்துதித்த மேன்மையர் யார்?

ஆரூரர் என்னும் திருநாமம் பெற்றவர் யார்?

நரசிங்க முனையரால் அன்புடன் ஆதரிக்கப் பட்டவர் யார்?

தமது திருமணத்தில் சிவனே வலிய வந்து 'இந்த மாப்பிள்ளை என் அடிமை' எனக் கூறி ஆட்கொள்ளப் பெற்றவர் யார்?

'வன்றொண்டா' எனப் பிரானார் அழைத்து 'பித்தா என நீ எம்மை அழைத்தனுல் பித்தா எனப்,

பாடத் தொடங்கு' என்று உரைக்க அங்கம் சிலிர்த்து அவ்வாறே பதிகம் தொடங்கிப் பாடினவர் யார்?

தல யாத்திரையில், சித்தவட மடத்தில் தூங்கும் போது சிவபிரானால் தலைமிசை மிதிக்கப் பட்டவர் யார்?

அண்ணல் அருளால் ஆரூரில் பரவையை மணந்தவர் யார்?

திருத் தொண்டத் தொகை பாடிச் சைவ நெறியை எங்கும் தழைப்பித்தவர் யார்?

குண்டையூரில் உள்ள நெல் மலையைத் திருவாரூருக்கு வந்து சேரும்படி செய்த தவத்தினர் யார்?

கோட்புலியாரின் நட்புக் கிணங்கி அவரது அருமை மக்களாம் சிங்கடி, வனப்பகை என்பவரைத் தமது மக்களாக ஏற்றவர் யார்?

பதிகப் பயனாய், செங்கற்கள் பொன் கற்களாக மாறப் பெற்றவர் யார்?

இறைவரால் கூடலையாற்றூருக்கு வழி காட்டப் பெற்றவர் யார்?

திருமுதுகுன்றில் (விருத்தாசலத்தில்) ஆற்றில் இட்ட பொன்னைத் திருவாரூரிற் குளத்தில் வரப்பெற்றுப் பரவையை மகிழ்வித்தவர் யார்?

குருகாவூருக்கு அருகில் இறைவனே பொதி சோறு தரப் பெற்றவர் யார்?

திருக்கச்சூரில் இறைவனே பிச்சை யெடுத்து அன்னம் கொண்டுவந்து தரப் பெற்றவர் யார்?

ஓணகாந்தன்தளியில் இறைவனைப் பாடிப் பொன் பெற்றவர் யார்?

திருவொற்றியூரில் சங்கிலியை மகிழ மரத்தின் கீழ்த் திருமணஞ் செயப் பெற்றவர் யார்?

சொன்ன சொல் தவறிய குற்றத்தாற் கண்ணின் ஒளியை இழந்து வருந்தி என் குற்றத்தைப் பொறுத் தருளுக என வேண்ட ஊன்றுகோல் ஒன்று இறைவன் தரப் பெற்றவர் யார்?

காஞ்சியில் ஒரு கண்ணின் பார்வையைப் பெற்றவர் யார்?

திருத்துருத்தியில் திருக்குளத்திற் குளித்து உடலில் உற்ற நோய் விலகப் பெற்றவர் யார்?

திருவாரூரில் இறைவனொடு மன்றாடி ஊடி மற்றைக் கண்ணின் பார்வையும் பெற்று மகிழ்ந்தவர் யார்?

பரவையாரிடம் சிவபிரானைத் தூதனுப்பின நேயர் யார்?

இறைவனை இப்படித் தூதனுப்பினவருடைய முகத்தை நான் பாரேன் என்று ஏசின ஏயர்கோன் கலிக்காமநாயனாருடைய நட்பை இறைவன் திருவருளாற் பெற்றவர் யார்?

தம்மை நாடிவந்த சேரமானது நட்பைப் பெற்றவர் யார்?

காவிரியின் வெள்ள நீரை வழி விடும்படி செய்து திருவையாற்றைத் தரிசித்தவர் யார்?

சேரமான் அளித்த பொன்னாதிய பொருள்கள் வழியிலே பறிக்கப்பட்டு பின்பு இறைவன் அருளால் திரும்பிவரப் பெற்றவர் யார்?

முதலையுண்ட பிள்ளை உயிர் பெற்றெழும்படி பதிகம் பாடிய தவ முதல்வர் யார்?

வெள்ளை யானையின் மீதேறிக் கயிலை சார்ந்த அந்தணர் யார்?

தம்மை பிரிந்திருக்க ஆற்றாது குதிரை மீதேறிக் கயிலைக்கு வந்த சேரர்பிரானைச் சிவசந்நிதியிற் கொண்டு சேர்த்து அங்கு அவருடன் அங்கே தரித்து நின்றவர் யார்?

அவரே என் துணை, அவரே என் பொருள், அவரே என் உயிர், அவரே என் உண்மணியாய் நின்று உள்ளத் தொளிபெருக்கும் கண்மணியாம் சுந்தரர் என்க.

## 63A. தொகை அடியார்

(1) தில்லை வாழந்தணர், (2) பொய்யடிமையில்லாத புலவர் (3) பத்தராய்ப் பணிகின்ற பண்பர் (4) பரமனையே பாடுகின்ற பான்மையாளர் (5) சித்தத்தைச் சிவன் பாலே சேர்ப்பவர் (6) திருவாரூர்ப் பிறந்தார்கள் (7) முப்போதும் திருமேனி தீண்டுவார் (8) முழுநீறு பூசிய முனிவர் (9) அப்பாலும் அடிச் சார்ந்த அடியார் —ஆகிய இவர்களின் பாத மலர்கள் போற்றி.

## 63B. போற்றியுரை

நம்பி யாண்டார் நம்பி, சேக்கிழார் பெருமான் இவர் தம் திருத்தாள்கள் போற்றி, அரன் திருப்புகழ் போற்றி.

---

# அநுபந்தம்

## பா வகை விளக்கம்:

அ—அப்பர், ச—சம்பந்தர், சு—சுந்தரர், தா—தாயுமானவர்
மா—மாணிக்கவாசகர், கா—காரைக்கால் அம்மை

---

| | யாரைக் குறிக்கும் செய்யுள் | பாவகை (இயற்றமிழில்) | பாவகை (இசைத் தமிழில் நால்வர் பாக்களில்) |
|---|---|---|---|
| | காப்பு | கட்டளைக் கலித்துறை | திருவிருத்தம் (அ) |
| 1. | திருநீலகண்டர் | 5 சீர் | அற்றன்றி யந்தண் (ச) |
| 2. | இயற்பகை | 4 சீர் | திருக்குறுந் தொகை (அ) |
| 3. | இளையான்குடி | 4 சீர் | உண்ணாமுலை (ச)<br>வாழ்வாவது (சு) |
| 4. | மெய்ப் பொருள் | வெண்பா | பண்டாய நான்மறை (மா)<br>பிறந்துமொழி (கா) |
| 5. | விறன்மிண்டர் | 8 சீர் | தில்லை வாழந்தணர் (சு)<br>பத்தூர்புக்கிரந்துண்டு (சு) |
| 6. | அமர்நீதி | 6 சீர் | .... .... ........ .... .... |
| 7. | எறிபத்தர் | 5 சீர் | .... .... ........ .... .... |
| 8. | ஏனாதி | 6 சீர் | மூத்தா முத்தி (சு)<br>மருவார்கொன்றை (சு) |
| 9. | கண்ணப்பர் | 6 சீர் | உரை சேரும் (ச)<br>மெய்யெலாம் (அ) |
| 10. | குங்கிலிய | 8 சீர் | சூழ்ருயின (அ) |
| 11. | மானக்கஞ்சாறர் | 4 சீர் | தையலீர் (ச)<br>கரவாடும் (அ) |
| 12. | அரிவாட்டாயர் | 8 சீர் | குறுந்தொகை இரட்டித்தது (அ) |

| | | | |
|---|---|---|---|
| 13. | ஆனாயர் | 3 சீர் | அடலேறமரும் (ச) |
| 14. | மூர்த்தி | 4 சீர் | சொற்றுணைவேதியன் (அ)<br>துஞ்சலும் துஞ்சல் (ச) |
| 15. | முருகர் | 8 சீர் | மைம்மரு பூங்குழல் (ச) |
| 16. | உருத்திரபசுபதி | 3 சீர் | இன்குரல் இசைகெழு (ச) |
| 17. | திருநாளை | 8 சீர் | திருத்தாண்டகம் (அ) |
| 18 | திருக்குறிப்பு | 7 சீர் | அங்கிங்கெனாதபடி (தா) |
| 19. | சண்டேசுரர் | 7 சீர் | மங்கையர்க்கரசி (ச)<br>திருவுமெய்ப் (சு)<br>உம்பர்கட் கரசே (மா) |
| 20. | திருநாவுக்கரசு | 3 சீர் | துஞ்சலும் துஞ்சல் (ச)<br>[இரட்டித்தது] |
| 21. | குலச்சிறை | 4 சீர் | நீலமாமிடற் (ச) இரட்டித்தது<br>மாறிலாத(மா)-பாதி. |
| 22. | பெருமிழலை | 5 சீர் | .... .... .... ........ .... |
| 23. | காரைக்கால் | 6 சீர் | என்ன புண்ணியம் (ச)<br>ஆடுகின்றிலை (மா) |
| 24. | அப்பூதி | 4 சீர் | போற்றியென் வாழ்முதலாகிய (மா)—பாதி |
| 25. | நீலநக்கர் | 8 சீர் | போற்றியென் வாழ் முதலாகிய (மா) |
| 26. | நமிநந்தி | 6 சீர் | திருநேரிசை (அ) |
| 27. | சம்பந்தர் | 21 சீர் | மானினேர்விழி (ச)<br>—மும்மடங்கு<br>மற்றுப்பற்றெனக்(சு)ஷை<br>பிணாக்கிலாத (மா) ஷை |
| 28. | ஏயர்கோன் | 6 சீர் | திங்களொடருவரை (ச)<br>தளிரிள வளரொளி (ச) |

| | | | | |
|---|---|---|---|---|
| 29. | திருமூலர் | 5 சீர் | நன்றுடை யானை | (ச) |
| 30. | தண்டி | 7 சீர் | நம் பொருள் நம் மக்கள் | (ச) |
| 31. | மூர்க்க | 4 சீர் | ஏடுமலி | (ச) |
| 32. | சோமாசி | 5 சீர் | துறைமல்கு | (ச) |
| 33. | சாக்கிய | 8 சீர் | .... .... ........ .... | .... |
| 34. | சிறப்புலி | 5 சீர் | செங்நெலங் | (ச) |
| 35. | சிறுத்தொண்டர் | 4 சீர் | கலவ மஞ்ஞை | (ச) |
| 36. | சேரமான் | 6 சீர் | பவனமாய் | (ச |
| | | | மருந்தவை | (ச) |
| 37. | கணநாதர் | 5 சீர் | சிந்தை யிடையார் | (ச) |
| | | | உண்டாய் நஞ்சை | (ச) |
| 38. | கூற்றுவ | 8 சீர் | வேயுறு தோளி | (ச) |
| 39. | புகழ்ச்சோழ | 7 சீர் | .... .... ........ .... | .... |
| 40. | நரசிங்க | 7 சீர் | .... .... ........ .... | .... |
| 41. | அதிபத்தர் | 7 சீர் | .... .... ........ .... | .... |
| 42. | கலிக்கம்பர் | 7 சீர் | .... .... ........ .... | .... |
| 43. | கலியர் | 8 சீர் | மந்திரமாவது | (ச) |
| | | | கீதமினிய | (மா) |
| 44. | சத்தி | 4 சீர் | பொன் திரண்டன்ன —பாதி | (ச) |
| | | | வள்ங்கிளர் | (ச) |
| 45. | ஐயடிகள் | 4 சீர் | நீரானே | (ச) |
| 46. | கணம்புல்லர் | 4 சீர் | தன்னம் பெய் | (ச) |
| | | | சூலப் படையானை | (அ) |
| 47. | காரி | 5 சீர் | பண்ணிலாவிய | (ச) |

| | | |
|---|---|---|
| 48. நெடுமாற | 4 சீர் | தொண்டெலா (ச)-ஒரு அசை குறைவு |
| 49. வாயிலார் | 4 சீர் | பிடியெலாம் (ச)<br>பூவியல் (ச) |
| 50. முனையடுவார் | 4 சீர் | சுடுமணி (ச) |
| 51. கழற்சிங்கர் | 4 சீர் | முந்திநின்ற (ச) |
| 52. இடங்கழி | 5 சீர் | நலச்சங்க (ச)<br>உருவார்ந்த (ச) |
| 53. செருத்துணை | 4 சீர் | .... .... ........ .... .... |
| 54. புகழ்த்துணை | 6 சீர் | .... .... ........ .... .... |
| 55. கோட்புலி | 7 சீர் | .... .... ........ .... .... |
| 56. பூசலார் | 4 சீர் | கற்றுங் கெரி (ச) |
| 57. மங்கையர்க்கரசி | 6 சீர் | பொங்குவெண்மணல் (ச) |
| 58. நேச நாயனார் | 6 சீர் | (பல்லாண்டு வகையது) |
| 59. கோச் செங்கட் | 5 சீர் | துஞ்ச வருவாரும் (ச) |
| 60. நீலகண்டயாழ்ப் பாணர் | — | மாதர்மடப்பிடி (ச) |
| 61. சடைய | 2 சீர் | பிடியெலாம் (ச)-பாதி |
| 62. இசை ஞானி | 3 சீர் | .... .... ........ .... .... |
| 63. சுந்தரர் | கலிவெண்பா | கந்தர் கலிவெண்பா |
| 63A. தொகை அடியார் | அகவல் | .... ........ .... .... |
| 63B. நம்பியாண்டார் சக்கிழார் | அகவல் | .... ........ .... .... |